# ஸ்ரீ தக்ஷிணாமூர்தயஷ்டகம்

(அஷ்டகம்: எட்டுச்லோகம் கொண்ட துதி)

“தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம்" எனப்பட்டாலும் பத்து ச்லோகங்கள் கொண்ட இந்த ஸ்தோத்ரத்தின் தொடக்கத்தில் அடியிற்காணும் த்யான ச்லோகம் கூறப்படும்:

**மௌன - வ்யாக்2யா - ப்ரகடித - பர**
**ப்3ரஹ்ம தத்வம் யுவானம்**
**வர்ஷிஷ்டா2ந்தேவஸத்3 - ருஷிக3ணை**
**- ராவ்ருதம் ப்2ரஹ்ம நிஷ்டை: |**
**ஆசார்யேந்த்3ரம் கரகலித - சின்**
**முத்3ர - மானந்த3 ரூபம்**
**ஸ்வாத்மாராமம் முதி3தவத3னம்**
**த3க்ஷிணாமூர்த்தி - மீடே3 ||**

மௌனமான விளக்கத்தாலேயே பரப்பிரம்ம தத்வத்தைப் பிரகடனம் செய்பவரும், யுவவடிவினரும், மிகவும் கிழவர்களான - பிரம்ம நிஷ்டர்களான ரிஷிகளை சிஷ்யர்களால் சூழ்ப்பட்டவரும், ஆசார்யருள் தலைசிறந்தவரும், கையில் சின்முத்ரை கூடியவரும், ஆனந்தரூபியும், தன் ஆன்மாவிலேயே ரசிப்பவரும், நகைமுகத்தினருமான தக்ஷிணாமூர்த்தியைப் போற்றுகிறேன்.

**விச்வம் த3ர்பண த்3ருச்யமான நக3ரீ**
**துல்யம் நிஜாந்தர்க3தம்**
**பச்யன்னாத்மனி மாயயா ப3ஹிரிவோத்3-**
**பூ4தம் யதா2 நித்3ரயா,**
**ய: சாக்ஷாத்குருதே ப்ரபோ3த4ஸமயே**
**ஸ்வாத்மானமேவாத்வயம்**
**தஸ்மை ஸ்ரீ கு3ருமூர்த்தயே நம இத3ம்**
**ஸ்ரீ த3க்ஷிணாமூர்த்தயே.** 1

கண்ணாடியில் காணும் நகரம் போன்றதும், தனக்குள்ளேயே இருப்பதுமான இவ்வுலகை, தூக்கத்தில் தன்னொருவனிடமிருந்தே பலவற்றை உண்டாக்கிக் கனவு காண்பதுபோல் மாயையினால் வெளியில் உண்டானதைப் போல் பார்த்துக் கொண்டு எந்த ஜீவன் தூங்கி விழித்த ஸமயத்தில் (ஞானம் வந்த ஸமயத்தில்) இரண்டில்லாத (யாவற்றிற்கும் காரணமாகிய) தன் ஆத்மாவையே நேரில் ன் தான் அந்த ஆத்மா' என்று உணருகிறானோ அந்த (சச்சிதானந்த ஸம்பத்து பொருந்திய குருவின் உருவமுடைய தெற்கு நோக்கிய தெய்வமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம் (உரித்தாகுக.)

**பீ3ஜஸ்யாந்தரிவாங்குரோ ஜக3தி3த3ம்**
**ப்ராங் நிர்விகல்பம் புன:**
**மாயாகல்பித தே3சகாலகலனா**
**வைசித்ர்யசித்ரீக்ருதம்,**
**மாயாவீவ விஜ்ரும்ப4யத்யபி மஹா**
**யோகீ3வ ய: ஸ்வேச்சயா**
**தஸ்மை ஸ்ரீ கு3ருமூர்த்தயே நம இத3ம்**
**ஸ்ரீ த3க்ஷிணாமூர்த்தயே.** 2

விதையின் உள்ளே முளையிருப்பதுபோல் சிருஷ்டிக்கு முன்பு வேற்றுமை யில்லாததும், (சிருஷ்டிக்குப்) பிறகு (ஈசனின் சக்தியாகிய) மாயையினால் கற்பித்த தேசம், காலம் அவைகளின் சேர்க்கை ஆகிய வேற்றுமையினால் பற்பலவிதமா யிருக்கின்றதுமான இந்த உலகை எவர் இந்த்ர ஜாலம், செய்பவனைப் போலவும் மஹா யோகியைப் போலவும் தன்னிஷ்டத்தினாலேயே சிருஷ்டிக்கிறாரோ அந்த (ஸச்சிதானந்த) ஸம்பத்து பொருந்திய குருவின் உருவமுடைய தெற்கு நோக்கிய தெய்வமான ஸ்ரீதக்ஷிணா மூர்த்திக்கு இந்த நமஸ்காரம் (உரித்தாகுக.)

**யஸ்யைவ ஸ்பு2ரணம் ஸதா3த்மகமஸத்**
**கல்பார்த2க3ம் பா4ஸதே**
**ஸாக்ஷாத் தத்வமஸீதி வேத3வசஸா**
**யோ போ3த4யத்யாச்ரிதான்,**
**யத்ஸாக்ஷாத்கரணாத் ப4வேந்த புனரா**
**வ்ருத்திர்ப4வாம்போ4 நிதௌ4**
**தஸ்மை ஸ்ரீகு3ருமூர்த்தயே நம இத3ம்**
**ஸ்ரீ த3க்ஷிணாமூர்த்தயே.** 3

எந்த பரமாத்மாவினுடைய ஸத்ருபமான (எக்காலத்திலும் எத்தேசத்திலும் 'இருக்கிறது' என்ற அறிவிற்கு விஷயமான) வெளிப்பாடே இல்லாமலிருக்கும் பொருளுக்கு ஒப்பான வெளி வஸ்துக்களை அடைந்து விளங்குகிறதோ; அதாவது புற ப்ரபஞ்சம் போல விளங்குகிறதோ; சரணமடைந்தவர்களை நீயே அது (பரமாத்மா) வாக இருக்கிறாய் "தத் - தவம் - அஸி" என்ற வேத வாக்கியத்தினால் நேருக்கு நேராகவே (தத்வ ஸ்வரூபமான ஆத்மாவை) அறிவிக்கிறாரோ; எவரை நேராக அனுபவிப்பதால் பிறவியென்னும் கடலில் மறுமுறை வருகை உண்டாகாதோ அந்த (ஸச்சிதானந்த ஸம்பத்து பொருந்திய குருவின் உருவமுடைய தெற்கு நோக்கிய தெய்வமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம் (உரித்தாகுக).

**நானாசித்ர கடோதரஸ்தித மஹா**
**தீப ப்ரபா பாஸ்வரம்**
**ஜ்ஞானம் யஸ்ய து சக்ஷூராதி கரண**
**த்வாரா பஹி: ஸ்பந்ததே,**
**ஜானாமீதி தமேவ பாந்த மனுபாத்**

**யேதத் ஸமஸ்தம் ஜகத்**
**தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம்**
**ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.** 4

பற்பல ஓட்டைகளோடு கூடிய குடத்தின் உள்ளே இருக்கின்ற பெரிய விளக்கின் ஒளி (அந்த ஓட்டைகள் மூலம்) போல் எந்த ஆத்மாவினுடைய அறிவு கண் முதலிய புலன்களில் வழியாக வெளியில் செல்லுகிறதோ, "நான் அறிகி றேன்" என்று விளங்குகிற அந்த ஆத்மாவான யாதொன்றையே இந்த எல்லாமான உலகமும் பின்பற்றி விளங்குகிறதோ அந்த (ஸச்சிதானந்த) ஸம்பத்து பொருந்திய தெற்கு நோக்கிய தெய்வமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம் (உரித்தாகுக)

**தே3ஹம் ப்ராணமபீந்த்3ரியாண்யபி சலாம்**
**பு3த்3தி4ம் ச சூன்யம் விது3:**
**ஸ்த்ரீபா3லாந்த4 ஜடோ3பமாஸ்த்வஹமிதி**
**ப்4ராந்தா ப்4ருசம் வாதி3ன:**
**மாயா சக்தி விலாஸ கல்பித மஹா**
**வ்யாமோஹ ஸம்ஹாரிணே**
**தஸ்மை ஸ்ரீ கு3ருமூர்த்தயே நம இத3ம்**
**ஸ்ரீ த3க்ஷிணாமூர்த்தயே.** 5

உடலையும், உயிர்மூச்சையும் புலன்களையும், (கணத்திற்கோர் முறை) மாறுகின்ற புத்தியையும், ஒன்றுமில்லாத சூன்ய நிலையையும் தான்" என்று (ஆத்மாவென்று) தத்வ வாதிகள், பெண்கள், குழந்தைகள், குருடர்கள், அறிவற்றவர்கள் இவர்களுக்கு ஒப்பாக மிகவும் ஏமாந்தவர்களாக அறிந்தார்கள் (எண்ணுகிறார்கள்). (இவ்வாறு) மாயா சக்தியின் விலாஸங்களால் உண்டாக்கப் பட்ட பெரும் மயக்கத்தை அகற்றும் அந்த (ஸச்சிதானந்த) ஸம்பத்து பொருந்திய தெற்கு நோக்கிய தெய்வமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம் (உரித்தாகுக).

**ராஹுக்3ரஸ்த தி3வாகரேந்து3 ஸத்3ருசோ**
**மாயாஸமாச்சா2த3னாத்**
**ஸன்மாத்ர: கரணோபஸம்ஹரணதோ**
**யோபூ4த் ஸுஷுப்த: புமான்,**
**ப்ராக3 ஸ்வாப்ஸமிதி ப்ரபோ3த4 ஸமயே**
**ய: ப்ரத்யபி4ஜ்ஞாயதே**
**தஸ்மை ஸ்ரீ கு3ருமூர்த்தயே நம இத3ம்**
**ஸ்ரீ த3க்ஷிணாமூர்த்தயே.** 6

எந்த ஆத்மா தூக்கத்தில் மாயையினால் மூடப்பட்டிருப்பதால் ராகு மறைத்த சூர்ய சந்திரர்களுக்கு ஒப்பாக, ஸத் (இருத்தல்) ரூபமாக மட்டும் இருந்துகொண்டு இந்த்ரியங்களை செயலற்றனவாக அடக்கி இருந்தானோ, (எந்த ஆத்மா) விழித்துக்கொண்ட சமயத்தில் முன்பு (இதுவரையில்) "தூங்கினேன்" என்று நினைக்கப்படுகிறானோ அந்த ஸச்சிதானந்த ஸம்பத்து பொருந்திய தெற்கு நோக்கிய தெய்வமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம் (உரித்தாகுக).

**குறிப்பு:** - உறங்கும் பொழுது ஆத்மா ஐம்புலன்களையும் மனதையும் ஒருவித செய்கையும் இல்லாமல் அடக்கி இருக்கிறது. இவ்வாறு மனமும் புலனும் செயற்படாத போதிலும், தூக்க நிலையிலும் ஆத்மாநுபவம் ஏற்படவில்லை. ஏனெனில் தூங்கும் பொழுதும் மாயை மூடிக் கொண்டிருக்கிறது. ஆகவே கிரகண வேளையில் சூரியனும் சந்திரனும் அழியா விடினும், புலனாகாமல் இருப்பது போல், ஆத்மா தூக்கத்தில் இருப்பினும், விளங்காமல் இருக்கிறது. உறங்கும் பொழுது மனமும் புலனும் இல்லாதது போல், ஆத்மாவும் இல்லை என்று கூறமுடியாது. ஏன் என்றால், விழித்துக் கொண்டவுடன் 'தான் உறங்கினேன்' என்று உறங்கினவனுக்கு அறிவு உண்டாகிறதல்லவா;

**பா3ல்யாதி3ஷ்வபி ஜாக்3ரதா3தி3ஷ ததா2**
**ஸர்வாஸ்வவஸ்தா2ஸ்வபி**
**வ்யாவ்ருத்தாஸ்வனுவர்தமானமஹ -**
**மித்யந்த: ஸ்பு2ரந்தம் ஸதா3,**
**ஸ்வாத்மானம் ப்ரகடீகரோதி ப4ஜதாம்**
**யோ முத்3ரயா ப4த்3ரயா**
**தஸ்மை ஸ்ரீகு3ருமூர்த்தயே நம இத3ம்**
**ஸ்ரீ த3க்ஷிணாமூர்த்தயே,** **7**

குழந்தைப் பருவம் (இளமை, முதுமை) முதலானதும், அப்படியே ஜாக்ரத் (விழிப்பு, கனவு, தூக்கம்) முதலான துமான வேறுபட்ட எல்லா அவஸ்தைகளிலும் வேறுபடாமல் தொடர்ந்து வந்துகொண்டிருப்பதும்; எப்பொழுதும் நான் என்று உள்ளே விளங்குவதுமான; தன்னைக் காட்டிலும் வேற்றுமை இல்லாத பரமாத்மாவை தன்னை ஸேவிப்பவர்களுக்கு எந்த தக்ஷிணாமூர்த்தி மங்களமான சின் முத்திரையினால் ப்ரத்யக்ஷமாக காண்பிக்கிறாரோ அந்த (ஸச்சிதானந்த) ஸம்பத்து பொருந்திய தெற்கு நோக்கிய தெய்வமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம் (உரித்தாகுக).

**குறிப்பு:** - தக்ஷிணாமூர்த்தியின் உருவத்தில் வலது கை கட்டை விரலும் ஆள் காட்டி விரலும் சேர்க்கப்பட்டு துலங்குவதைப் படங்களிலும் உருவ சிலைகளிலும் காணலாம். அதற்கு சித் அல்லது ஞான முத்திரை என்று பெயர். அதற்கு ஜீவ - பிரம்ம ஐக்யம், (உயிரும் கடவுளும் ஒன்றுதல்) என்பது பொருள். அதனாலேயே தன்னை அடக்கலம்

புகுந்தோர்க்கு சித் முத்திரையால் அவர் ஆத்ம தத்வத்தை உபதேசிப்பதாக இந்த சுலோகம் கூறுகிறது.

**விச்வம் பச்யதி கார்யகாரணதயா**
**ஸ்வஸ்வாமி ஸம்ப[3]ந்த[4]த:**
**சிஷ்யாசார்யதயா ததை[2]வ பித்ரு**
**புத்ராத்[3]யாத்மனா பே[4]த்[3]த:**
**ஸ்வப்னே ஜாக்[3]ரதி வா ய ஏஷ புருஷோ**
**மாயா பரிப்[4]ராமித:**
**தஸ்மை ஸ்ரீ கு[3]ருமூர்த்தயே நம இத[3]ம்**
**ஸ்ரீ த[3]க்ஷிணாமூர்த்தயே.** **8**

தூக்கத்திலோ, விழிப்பிலோ எந்த ஒரு ஆத்மா மாயையினால் பற்பல மருளை அடைவிக்கப்பட்டவராக இந்த உலகை கார்ய - காரணத் தன்மையோடும், தான் - தன் தலைவன் என்ற உறவோடும், சீடன் ஆசார்யன் என்ற தன்மையோடும், அப்படியே தகப்பன் - மகன் என்றும் பற்பல வேற்றுமையை உடையதாக பார்க்கிறாரோ அந்த (ஸச்சிதானந்த) ஸம்பத்து பொருந்திய தெற்கு நோக்கிய தெய்வமான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம் (உரித்தாகுக.)

**குறிப்பு: -** உலகம் பொய். ஆத்மா மாயையில் உட்பட்டுப் பலவிதமாக கற்பித்தது இவ்வுலகம். அந்த மாயை கடவுளின் சக்தி. ஆகவே கடவுள் மாயைக்குள் புகுந்து ஜீவ வடிவம் கொண்டு உலகை உண்டாக்குவதாக வேதாந்தம் கூறுகிறது. இக்கருத்து இங்கு விளங்குகிறது.

**பூ[4]ரம்பா[4]ம்ஸ்ய நலோ நிலோம்ப[3]ர**
**மஹர் நாதோ[2] ஹ்மாம்சு: புமான்**
**இத்யாபா[4]தி சராசராத்மகமித[3]ம்**
**யஸ்யைவ மூர்த்யஷ்டகம்,**
**நான்யத் கிஞ்சன வித்[3]யதே விம்ருசதாம்**
**யஸ்மாத் பரஸ்மாத் விபோ[4]:**
**தஸ்மை ஸ்ரீ கு[3]ருமூர்த்தயே நம இத[3]ம்**
**ஸ்ரீ த[3]க்ஷிணாமூர்த்தயே.** **9**

எந்த பரமேச்வரனுக்கே பூமி, ஜலம், அக்னி, காற்று, ஆகாயம், சூர்யன், சந்திரன், உயிர் என்று இவ்விதம் இந்த அசைகின்றதும் அசையாததுமான எட்டு உருவம் பிரகாசிக்கின்றதோ; உலகத்தின் உண்மையை சோதிக்கின்றவர்களுக்கு எங்கும் நிறைந்த எந்த பரமாத்மாவைக் காட்டிலும் வேறு ஒன்றும் இல்லையோ அந்த (சச்சிதானந்த) ஸம்பத்து பொருந்திய தெற்கு நோக்கிய தெய்வமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம் (உரித்தாகுக).

**ஸர்வாத்மத்வமிதி ஸ்புடீக்ருதமித3ம்**
**யஸ்மாத3முஷ்மிம்ஸ்தவே**
**தேனாஸ்ய ச்ரவணாத் தத3ர்த2 மனனாத்**
**த்4யானாச்ச ஸங்கீர்த்தனாத்,**
**ஸர்வாத்மத்வ மஹா விபூ4தி ஸஹிதம்**
**ஸ்யா3 தீச்வரத்வம் ஸ்வத:**
**ஸித்3த்4 யேத் தத் புனரஷ்டதா4 பரிணதம்**
**சைச்வர்யமவ்யாஹதம்.** 10

இந்த முறையில் இந்த ஸ்தோத்ரத்தில், எல்லாம் ஒரே ஆத்ம ரூபம் என்ற தத்துவம் விளக்கப் பெற்றிருக்கிறதோ அவ்வாறு அறிவதால் இந்த ஸ்தோத்த ரத்தை கேட்பதாலும், இதன் பொருள் மனதால் சிந்திப்பதாலும், தியானம் செய்வதாலும், பிறருக்கு நன்றாகச் சொல்வதாலும், எல்லாம் ஒரே ஆத்மாவாக இருக்கும் நிலையாகிய பெரிய ஐச்வர்யத்தோடு கூடிய பரமாத்மத் தன்மை ஏற்படும். மேலும் எட்டாக வகுக்கப்பட்ட அணிமாதி ஸித்திகளான ஐச்வர்யமும் தடையின்றி தானாகவே கைகூடும்.

அதன்பின் அடியாற்காணும் சுலோகங்களும் கூறப்படுவது வழக்கம்.

**சித்ரம் வடதரோர் - மூலே வ்ருத்3தா4:**
**சிஷ்யா கு3ருர்யுவா ।**
**கு3ரோஸ்து மௌனம் வ்யாக்2யானம்**
**சிஷ்யாஸ்து சி3ன்னஸம்சயா: ॥**

ஆலமரத்தடியிலே ஒரு விசித்ரம்! சீடர்கள் கிழவர்கள். குருவோ யுவர்! குருவின் விளக்கவுரை மௌனமாகவே உள்ளது ஆயினும் சிஷ்யர்கள் ஐயம் தீர்ந்தவராகின்றனர்!

**ஓம் நம: ப்ரணவார்தா2ய**
**சுத்3த4 ஜ்ஞானைக மூர்த்தயே நம: ।**
**நிர்மலாய ப்ரசாந்தாய**
**ஸ்ரீ த3க்ஷிணாமூர்த்தயே நம: ॥**

ஓம்! ஓம் எனும் ப்ரபாவத்தின் பொருளாயும், கேவல ஞானத்தின் ஏக மான வடிவினராயும், நிர்மலராயும், உயர்ந்த அமைதி மயமாயும் உள்ள தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

**கு3ரவே ஸர்வலோகானாம்**
**பி4ஷஜே ப4வரோகி3ணாம் ।**
**நித4யே ஸர்வவித்3யானாம்**
**ஸ்ரீ த3க்ஷிணாமூர்த்தயே நம ॥**

எல்லா உலகங்களுக்கும் குருவும், ஸம்ஸாரம் என்னும் நோயுற்றோருக்கு மருத்துவரும், எல்லா வித்யைகளுக்கும் பொக்கிஷமும் ஆன தக்ஷிணாமூர்த்திக்கு வணக்கம்.

(இதன்பின், முதலிற் சொன்ன" மௌன - வ்யாக்யா'என்ற த்யான ச்லோகத்தை மீண்டும் கூறி முடிக்கவும்.)

**மௌன - வ்யாக்2யா - ப்ரகடித - பர**
**ப்3ரஹ்ம தத்வம் யுவானம்**
**வர்ஷிஷ்டா2ந்தேவஸத்3 - ருஷிக3ணை**
**- ராவ்ருதம் ப்3ரஹ்ம நிஷ்டை2: |**
**ஆசார்யேந்த்3ரம் கரகலித - சின்**
**முத்3ர மானந்த3 ரூபம்**
**ஸ்வாத்மாராமம் முதி3தவத3னம்**
**த3க்ஷிணாமூர்த்தி - மீடே3 ||**

மௌனமான விளக்கத்தாலேயே பரப்பிரம்ம தத்வத்தைப் பிரகடனம் செய்பவரும், யுவ வடிவினரும், மிகவும் கிழவர்களான - பிரம்ம நிஷ்டர்களான ரிஷிகளை சிஷ்யர்களால் சூழப்பட்டவரும், ஆசார்யருள் தலைசிறந்தவரும், கையில் சின்முத்ரை கூடியவரும், ஆனந்தரூபியும், தன் ஆன்மாவிலேயே ரசிப் பவரும், நகை முகத்தினருமான தக்ஷிணாமூர்த்தியைப் போற்றுகிறேன்.

